முனைவர். **மு. காளீஸ்வரன்**
உதவி பேராசிரியர் மற்றும் பொருளாதார துறைத் தலைவர்
ஈரோடு கலை மற்றும் அறிவியல் கல்லூரி

அம்மனைப் பற்றி போற்றி பாடுவது அந்தாதி அகவல் காமாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ் போன்றவை பிரசித்தி பெற்றவை. ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாவையும் இந்த வகையில் சேர்ந்ததே. இறைவனிடம் முறையிட்டு தங்கள் நலம் பெறவும், செழித்து வாழவும் இப்பாடல்கள் பெரிதும் உதவுகின்றன. இவ்வகையில் விருத்தம் என்பதும் நன்று. விருத்தம் எனப்படுவதற்கு சரியான இலக்கணம் குறிப்புகள் இல்லாத போதும், இதற்கான வரைமுறைகளும் இல்லை என்பதே தெளிவு. விருத்தம் எளியவை. பெரும்பாலும் கர்நாடக இசையால் பாடப்படுவது. ஆனாலும் கர்நாடக இசையின் சட்டதிட்டங்கள் இவைகளுக்கு கிடையாது. குறிப்பாக காமாட்சியம்மன் விருத்தம் என்பது அன்னை காமாட்சியை போற்றி பாடுவதோடு, அம்மையிடம் தங்கள் கவலைகளை முறையிடுதல் தான் பிரதானம். காமாட்சியம்மன் கோவில்களில் அலகு குத்துதல் நிகழ்வின் போது, வீரத்தை வெளிப்படுவதற்காக கைக்கோளர் வரலாற்றையும் நெசவு தொழிலுக்கு ஏனைய தேவர்களை துணைபுரிவதற்காகவும், தாங்கள் மேலாதிக்க வர்க்கத்தின் வழக்குகளிலிருந்து மீண்ட கதைகளின் மூலமாகவும், இனத்தாரின் காவல் தெய்வமான சேவற் கொடியோனின் பெருமைகள் பற்றியும், போரிட்ட முறைகளையும் வீர முழக்கத்தோடு “சபாஷ்” என்ற ஆர்பரிப்போடு கூறும் பொழுது நரம்புகள் முறுகேறி தமது இனம் வீரம் விளைந்த இனம் என பறைசாற்றும் முகமாக போடப்படுவது தான் **“விருத்தம்”.**

பெரும்பாலான காமாட்சியம்மன் விருத்தங்கள் அச்சில்லாமல் செவி வழிச் செய்திகளாக பரம்பரையாக போற்றி பாதுகாக்கப்பட்டவையாகும். இனப்பெருமை கொள்வோர் இத்தகைய விருத்தப் பாடல்களை அச்சியேற்ற வேண்டும் என அவா இருந்தாலும் இன்றைய தினம் இப்பாடல்கள் அச்சேறி அனைவரின் கைகளிலும் தவழ்ந்து கொண்டு இருக்கிறது. முயற்சி எடுத்த ந. சரவணன் அவர்களுக்கும், உறுதுணையாய் இருந்திட்ட அனைவருக்கும் இனமக்களின் சார்பாக நன்றி.

செங்குந்தர் வரலாறு மீட்பு குழு
7826980901

**ரா. சண்முகம் முதலியார்**
வைரவிழா மேல்நிலைப் பள்ளி
கோபி. 94420 01920

கருணை வடிவான காமாட்சியம்மனுக்கு விருத்தம், வழிபாட்டு பாடல், அஷ்டோத்ர நமாவளி, ஸ்ரீ காமாட்சியம்மன் சுப்ரபாதம், அர்ச்சனை, துதிப்பாடல் என பல வகை பாடல்களில் நம் செங்குந்த சமுதாயத்தாரால் மிகவும் விரும்பி பாடப்படும் பாடல் காமாட்சியம்மன் விருத்தம்.

இன்றைக்கும் காஞ்சிபுரம் காமாட்சியம்மன் ஆலயத்தில் அம்மனை தரிசிக்கும் போது விருத்தபாடலையும் பார்த்து பாடும் வகையில் கருவறையிலேயே விருத்தப்பாடல் எழுதி வைக்கப் பட்டுள்ளது. இப்பதிப்பில் கந்தனாகிய சுப்பிரமணியம் விருத்தம், நடராசப் பத்து எனும் பெயரில் அழைக்கப் பெறும் நடராசர் விருத்தம், முதற்கடவுளான விநாயகர் விருத்தம், தமிழ் மண்ணில் கொங்கு மண்டலத்தில் பதிப்பு என்று இல்லாமல் செவிவழியாக கேட்டு பாடப்பட்ட கடவுள்களின் நினைவை நீடிக்கச் செய்யும் விருத்தங்களும், நெசவின் பெருமையை விளக்கும் விருத்தங்களும் நம் செங்குந்த சமுதாய தமிழ் கடவுள் முருகனின் சகோதரனாக வாழ்ந்த காமாட்சியம்மனின் அருள் பெற்று ஒன்பது வீரர்களில் முதலானவரான வீரபாகுவின் வம்சம் என தெரியபடுத்தும் வகையிலான விருத்த பாடல்களும் உள்ளன. முன் முயற்சியாக பதிப்பு செய்யும் இப்பணிக்கு என் பாராட்டுகளையும் மேலும் பல பதிப்புகள் வெளியிடவும், சிறப்புரவும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.



அன்பு செங்குந்த சொந்தங்களுக்கு வணக்கம் !

தற்போது தங்கள் கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கும் இந்நூல் பெரும்பாலும் செவிவழி விருத்தங்களின் அடிப்படையிலும், காமாட்சியம்மனுக்குரிய 11 விருத்தங்களையும் உள்ளடக்கியது. மேலும் முதல் முயற்சியாக விருத்த புத்தகமானது வெளிவருவதால் தடுமாறி நடைபயிலப் பழகும் சின்னஞ்சிறு குழந்தையாக இந்த விருத்த புத்தகத்தை கண்னுறுமாறு மிகப் பணிவோடு வேண்டுகிறேன்.

நம்முடைய சமூகத்தை பற்றி வரலாற்று புத்தகங்கள் நிறைய இருந்தாலும் இந்த விருத்தம் பற்றிய புத்தகங்கள் எங்கும் கிடைப்பதில்லை. அதிலும் குறிப்பாக சொல்வலக்கு விருத்தங்கள் என்பது கர்ண பரம்பரை கதை போலவே ஒருவரிடம் இருந்து இன்னொருவருக்கு செல்கிறது. இப்படி இல்லாமல் விருத்தத்தை ஒரு புத்தகமாக வெளியிட்டால் நம் சமூகத்திலுள்ள அனைவருக்கும் உபயோகமாக இருக்கும் என்கிற எண்ணத்தில் இப்புத்தகம் உருவாக்கப்பட்டுள்ளது.

விருத்தம் என்பது ஆழ்ந்த பக்தியின் வெளிப்பாடு உரிமை, கோபம், பயம், பக்தி, சரணாகதி என்று அனைத்தும் ஒருங்கே இணைந்த பாடல்.

முதன்முதலில் **"மானாட மலுவாட "** என விருத்தத்தை சொல்லி கொடுத்த எனது தந்தைக்கும், இந்த புத்தகத்தை வெளியிட தூண்டுகோலாக இருந்த முனைவர் **மு. காளீஸ்வரன்** அவர்களுக்கும்
திரு. **ரா. சண்முகம்** அவர்களுக்கும்,
விருத்தங்களை கொடுத்து உதவிய
திரு. **மா.ராமசாமி முதலியார்,** திருவாய் முதலியூர் – அவர்களுக்கும்,
தி. **க. பழனிச்சாமி முதலியார்,** திருப்பூர் – அவர்களுக்கும்,
திரு. **ரா. சண்முகம் முதலியார்,** கோபி – அவர்களுக்கும்,
திரு. **க. தமிழ்செல்வன் முதலியார்,** திருப்பூர் – அவர்களுக்கும்
புத்தகத்தை வெளியிட உதவிய அனைத்து உறவினர்களுக்கும்
தட்டச்சு செய்து கொடுத்த TWINKLE ADVERTISING **மு. தங்கராஜ் ,** திருப்பூர் அவர்களுக்கும் அச்சிட்டு கொடுத்த **ஸ்ரீ பிரிண்டர்ஸ் ர. பெரியசாமி மா. சிவராமன்,** திருப்பூர் – அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இப்பதிப்பில் இல்லாத விருத்தங்கள் புத்தகத்தை வாசிக்கின்ற தங்களுக்கு தெரியுமானால் எங்களுக்கு கொடுத்து உதவ வேண்டுகிறோம். அடுத்த பதிப்பில் கண்டிப்பாக அச்சில் ஏற்றி அனைவருக்கும் கிடைக்க செய்வோம். நன்றி.

என்றும் இறைபணியில்,

**ந. சரவணன்**
45-A, வரதன் வீதி, கோபிசெட்டி பாளையம்
செல் : 96004 11171, 94434 89874

1. சுந்தரி, சவுந்தரி நிரந்தரி துரந்தரி சோதியாய் நின்றவுமையே !
சுக்கிரவாரத்தில் உனை கண்டு தரிசித்தவர்கள் துன்பத்தை நீக்கிவிடுவாய்,
சிந்தைகளினுன் பாதந்தன்னையே தொழுபவர்கள் துன்பத்தை மாற்றிவிடுவாய்,
ஜெகமெல்லாம் முன்மாய்கை புகழ என்னால் ஆகுமோ சிறியனால் முடிந்திடாது !
சொந்த உன் மைந்தனாய் எந்தனை இரட்சிக்க சிறியகடனுள்ள தம்மா சிவசிவ !!
மகேசுவரி ! பரமனிட ஈஸ்வரி, சிரோன்மணி, மனோன்மணியும் நீ, அந்தரி,
துரந்தரி நிரந்தரி, பரம்பரி யனாத ரட்சகியும் நீயே ! அழகான
காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

2. பத்து விரல் மோதிரம் எத்தனை பிரகாசம் அது பாடகம் தண்டை கொலுசும்,
பச்சை வைடூரியமும், இச்சையாய் இழைத்திட்ட பாத சிலம்பினொலியும்,
முத்து மூக்குத்தியும், ரத்தினப் பதக்கமும், மோகன மாலையழகும்,
முழுதும் வைடூரியம்,
புஸ்பராகத்தினால் முடிந்திட்ட தாலியழகும், சுத்தமாயிருக்கின்ற காதினிற் கம்மலும்,
செங்கையில் பொன்கங்கணம், ஜெகமெல்லாம் விலைபெற்ற முகமெல்லாம்
பொலிவுற்ற சிறுகாது கொப்பினழகும், அத்தி வரன் தங்கை ! சக்தி சிவ ரூபத்தை,
அடியானால் சொல்ல திறமோ, அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி யுமையே !!

3. கெதியாக உந்தனைக் கொண்டாடி நினது முன், குறைகளை சொல்லி நின்றும்,
கொடுமையாய் என்மீதில் வறுமையை வைத்து நீ, குழப்பமாய் இருப்பதேனோ
சதிகாரி என்று நான் அறியாமல், உந்தனை சதமாக நம்பினேனே !
சற்றாகிலும், மனது வைத்து என்னை ரட்சிக்க சாதகம் உனக்கில்லையோ
மதிபோல் ஒளியுற்ற, புகழ் நெடுங்கரமுடைய மதகஜனை ஈன்ற தாயே
மாயனது தங்கையே, பரமனது மங்கையே, மயானத்தில் நின்ற உமையே,
அதிகாரி என்று நான் ஆசையாய் நம்பினேன்,
அன்பு வைத்து என்னை ஆள்வாய், அழகான காஞ்சியில்
புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

4. பூமியில் பிள்ளையாய்ப் பிறந்தும் வளர்ந்தும் நான் பேரான ஸ்தலமும் அறியேன் !
பெரியோர்கள் தரிசனம் ஒருநாளும் கண்டு நான் போற்றிக் கொண்டாடியறியேன் !
வாழி என்று என்னை சிவகாமி என்றே சொல்லி வாயினால் பாடி அறியேன் !
மாதா, பிதாவின் பாதத்தை நானுமே வணங்கி ஒரு நாளும் அறியேன் !
சாமி என்றே எண்ணி சதிருடன் கைகூப்பி சரணங்கள் செய்தும் அறியேன் !
சற்குருவின் பாதார விந்தங்களைக் கண்டு சாஷ்டாங்க எண்டனிற் அறியேன் !
ஆமிந்த புமியினடியனைப் போல் மூடன் ஆட்சி நீ கண்டது உண்டோ
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

5. பெற்ற தாயென்று, உன்னை மெத்தவும் நம்பினேன், பிரியமாய் இருந்தேன் அம்மா !
பித்தலாட்டக் காரியென்று, நான் அறியாது உன் புருசனை மறந்தேனம்மா !
பக்தனாயிருந்து முன் சித்தமும் இரங்காமல், பாராமுகம் பார்த்திருந்தால் - பாலன்
நான் எப்படி விசனம் இல்லாமல் பாங்குடன் இருப்பேன் அம்மா !
இத்தனை மோசங்கள் ஆகாது ! ஆகாது ! இது தர்மம் அல்லவம்மா.
எந்தனை இரட்சிக்க சிந்தனைகள் இல்லையோ, இது நீதியில்லையம்மா ?
அத்திமுகன் ஆசையா இப்புத்திரனை மறந்தையோ? அதை எனக்கு அருள் புரிவாய்.
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

6. மாயவன் தங்கை நீ, மரகதவல்லி நீ, மணி மந்திரக் காரியே நீ !
மாயா சொருபினி நீ, மகேஸ்வரியுமான நீ, மலையரசன் மகளான நீ,
தாயே மீனாட்சி ! நீ சற்குணவல்லி நீ, தயாநிதி விசாலாட்சி நீ,
தரணியில் பெயர் பெற்ற பெரியநாயகியும் நீ, சரவணனை ஈன்றவள் நீ,
பேய்களுடன் ஆடி நீ அத்தன் இடபாகம் அதில் பேர்பெற வளர்ந்தவளும் நீ,
பிரணவ சொருபி நீ, பிரசன்னவல்லி நீ, பிரிய அண்ணாமலையும் நீ,
ஆயி மகமாயி நீ, ஆனந்தவல்லி நீ, அகிலாண்டவள்ளி நீயே !
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

7. பொல்லாத பிள்ளையாய் இருந்தாலும் பெற்ற தாய் தன்புத்திகளைச் சொல்லவில்லையோ ?
பேய் பிள்ளையானாலும், தான் பெற்ற பிள்ளையைப் பிரியமாய் வளர்க்கவில்லையோ ?
கல்லாகிலும், மூச்சு நில்லாமல், வாய்விட்டு கதறி நான் அழுத குரல் !
கடுகுதனில் எட்டில் ஒரு பாகம் கூறுவதாகின் உன் காதினில் நுழைவதில்லையோ ?
இல்லாத வன்மங்கள் மீது ஏனம்மா? இனி விடுவதில்லை சும்மா !
இருவரும் மடிபிடித்து தெருதனில் வீழ்வது இது தர்மம் அல்லவம்மா ?
எல்லாரு உன்னையே சொல்லியே ஏசுவார் இது நீதியல்லவம்மா ?
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

8. முன்னையோ சென்மாந்திர என்னென்ன பாவங்கள் மூடன் நான் செய்தேனம்மா ?
மெய் என்று பொய் சொல்லி கைதனில் பொருள் தட்டி மோசங்கள் பண்ணினேனோ ?
என்னமோ தெரியாது ! இக்கணம் தன்னிலே இக்கட்டு வந்தது அம்மா !
ஏழை நான் செய்த பிழை தாய் பொறுத்தருள் தந்து என் கவலை தீரும் அம்மா !
சின்னங்களாகுது ஜெய இல்லையோ? தாயே சிறுநாணம் ஆகுதம்மா !
சிந்தனைகள் என்மீது வைத்த நட்பாக்கியம் அருள் சிவசக்தி காமாட்சி நீ ?
அன்ன வாகனம் ஏறி, ஆனந்தமாக உன் அடிமை முன் வந்து நிற்பாய்,
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

9. எந்தனைப்போலவே ஜனனம் எடுத்தோர்களின் இன்பமாய் வாழ்ந்திருக்க,
யான் செய்த பாவமோ இத்தனை வறுமையில், உன்னடியேன் தவிப்பதம்மா !
உன்னையே துணையென்று, உறுதியாய் நம்பினேன் உன் பாதம் சாட்சியாய்
உன்னையன்றி வேறு துணை யாரையும், இங்கு காணேன் ?
உலகம் தனில் எந்தனுக்கு என்னை என்று எண்ணி நீ சொல்லாமல் என் வறுமை
போக்கடித்து என்னை இரட்சித்து பூலோக மெச்சவே
பாலன் மார்க்கண்டன் போல், அடியேனை ரட்சிக்க அடிசெய் யாதேயம்மா !
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

10. பாரதம் தனில் உள்ளவும் பாக்கியத்தோடு உன்னைப் பாங்குடன் இரட்சிக்கவும்
பக்தியாய் உன்னை பாதம் நித்தம் தரிசித்த பாலருக்கு அருள் புரியவும்,
சீர்பெற்ற தேகத்தில், சிறு பிணிகள் வாராமல், செங்கலி அணுகாமலும்
சேயனிடம் பாக்கியம் செல்வங்களைத் தந்து, ஜெயம் பெற்று வாழ்ந்து வரவும்
பேர்பெற்ற காலனைப் பின்தொடர ஒட்டாமல் பிரியமாய் காத்திடம்மா
பிரியமாய் உன்மீதில் சிறியனான், சொன்னகவி பிழைகளை பொறுத்து, இரட்சி
ஆறுதனில் மணல் குவித்தரிய பூசை செய்த என்னம்மை யோகம்பாரி நீயே
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை காமாட்சி யுமையே !!

11. எத்தனை செனனம் எடுத்தோனோ தெரியாது இப்பூமி தன்னில் அம்மா !
இனியாகினும் கிருபை வைத்து என்னை இரட்சியும்,
இனி செனனம் எடுத்து விடாமல், உத்தரவு வேண்டும் என்று உன்னையே தொழுது
நான் முக்காலும் நம்பினேனே !
முன் பின்னும் தோணாத மனிதரைப்போல் நீ முழித்திருக்காதே அம்மா !
வெற்றிபெற உன் மீதில் பக்தியாய் நான் சொன்ன விருதங்கள் பதினொன்றையும்
விருப்பமாய்க் கேட்டு நீ அளித்திடும் செல்வத்தை விமலனா ஏசப்போறார் ?
அத்தனிட பாகமதை விட்டு வந்தே என் அருங்குறைத் தீரும் அம்மா !
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடு அம்மை காமாட்சி யுமையே !!

12. மானாட, மழுவாட, மதியாட, புனலாட, மங்கை சிவகாமியாட !
மாலாட, நூலாட, மறையாட, திரையாட, மறைதந்த பிரம்மனாட !
கோனாட, வானுலகு கூட்ட மெல்லாமாட, குஞ்சரம் முகத்தனாட !
குண்டலம் இரண்டாட, தண்டை புலியாட, குழந்தை முருகேசனாட !
ஞானசம்பந்தரோடு இந்திராதி பதினெட்டு முனியாட, பாலகருமாட !
நரை தும்பை அறுகாட, நந்திவாகனமாட, நாட்டியப் பெண்களாட !
வினையோட, உனைப்பாட எனை நாடி இது வேளை விருதோடு ஆடிவருவாய் !
ஈசனே ! சிவகாமி நேசனே ! என்னை ஈன்ற தில்லைவாழ் நடராஜனே !!



7

13. கடலென்ற புவிமீதில் அலை என்ற உருகொண்டு
கனவென்ற வாழ்வை நம்பி காற்றென்ற மூவாசை மாருதச் சுழலிலே கட்டுண்டு
நித்தம் நித்தம் உடலென்ற கும்பிக்கு உணவென்ற இரைதேடி ஓயாமல்
இரவும், பகலும் உண்டு உறங்குவதைக் கண்டதே
அல்லாது ! ஒரு பயனும் அடைந்திலேனே
தடமென்ற மிடிகரையில் பந்தபாசங்களென்னும் தாபரப் பின்னலிட்டு தாயென்று,
சேயென்று, நீயென்று, நானென்று, தமியேனை இவ்வண்ணமாய்
இடையென்று, கடைநின்று, ஏனென்று, கேளாது
இருப்பது உன் அழகாகுமோ
ஈசனே ! சிவகாமி நேசனே ! என்னை ஈன்ற தில்லை வாழ் நடராஜனே !

14. பம்பு சூனியமல்ல, வைப்பல்ல, வாரணம் தம்பனம் வசியமல்ல,
பாதாள வஞ்சனம் பிரகாயப் பிரவேசம் மதுவும் அல்ல, ஜாலமல்ல,
அம்பு குண்டுகள் விலக மொழியும் மந்திரம் அல்ல,
ஆகாய குளிகையும் அல்ல, அன்போடு செய்கின்ற வாத மோடிகள் அல்ல,
அரிய மோகனமும் அல்ல, கும்பமுனி, மச்சமுனி, சட்டமுனி, பிரம்மரிசி, கொங்கணர்
புலிப்பாணியும், கோரக்கர், வள்ளுவர்,
போகமுனி இவரெல்லாம் கூறிடும் வைத்தியம் அல்ல,
என் மனது உனைவிட்டு நீங்காது நிலை நிற்க ஈரேழு உலகு
புகழ் அருள்வாய் !!
ஈசனே சிவகாமி நேசனே என்னை ஈன்ற தில்லைவாழ் நடராஜனே !!

15. ஓர் ஆறு முகம் ஆட, ஈராறு புஜம் ஆட, ஓங்கு வடிவேலும் ஆட,
உச்சித குண்டலமும் கச்சிதம் முடி ஆட, ஒளியான சுட்டியாட, பாராட,
தண்டையும் பாதச்சிலம்பாட, பணிந்திடும் பக்தராட, பன்னிரு கரம் ஆட,
பணிந்த பூசணமாட, பவள வெண்குடைகள் ஆட, ஏறாத மயிலாட,
கோழித்துவம்சம் ஆட, துலங்கு நீர்காவியாட
தொண்டர்கள் முதலான சண்டிகேஷ்வரராட,
தொந்த நவவீரராட, தீராத தவமுனிவர் தானாட,
நீயாடி தமியேன் முன்பு வருவாய் தகதகவென மயிலேறி
திருநடனமாடி வரும் தணிகாசலக் கடவுளே !!

16. பார் எல்லாம் துதி பெற்ற பாதவிரல் மோதிரம், பாடகந்தண்டை கொலுசும்,
பதித்த இடைமீது அணிந்த பட்டாடையும், பசும்பொன்னில் ஒட்டியாணமும்,
வாரணியும் மார்பினில் சரப்பளி பதக்கமும், வச்ரமணி தாலியழகும்,
வையகம் துதிபெற்ற கையினில் கடகமும், வர்ணநிறமான கிளியும்,
சீர் ஒழுகும் காதினில் கம்மலும், தோடும் கொப்பும் ஜெகமெல்லாம் நிறைந்த உருவமும்,
சித்திர ஒளிப் பார்வையும், ரத்தின மூக்குத்தியும், செண்பகப்பூ முடித்த குழையும்
தாரணியில் உன் பெருமை சாற்ற எளிதாகுமோ, தரணி புகழ் ஒற்றி ஊர்வாழ்,
தங்கமலர் நாதர்சடை, கங்கையுருவான, கொடித் திங்கள் ஒளிவான வடிவே !

17. தன்னை அறியாமலே ஒரு குற்றம் செய்தால், அதை பொறுத்துக் கொள்ளாத சாமியை தொழுதும் என்ன?
தரணியில் இருப்பவற்கு அன்னமிட்டு, உன்னாத இந்த சடலம் அது இருந்தும் என்ன?
வன் வினைகள் ஆகவே நோவு, நோவு, என்று திரிகிற வாழ்நாளும், இருந்தும் என்ன?
வறுமை பிணி கொண்டு அழுகிற சடலம் அது உலகிலே வாழ்ந்துதான் ஆவது என்ன?
சொன்ன சொல் கேளாத ஆட்கள் இருந்தும் என்ன ?
தொண்டர்களை நம்பி என்ன?
பண்டைத்தமிழ் உத்தாரம் அறியாத மனிதரிடம், பழமையை கேட்டுத்தான் ஆவது என்ன?
இது எல்லாம் நடத்தையும் கண்டு உன்னை நம்பினேன், அறிய சொல்லுக்குரிய தேவி,
அண்டத்திலோ உறவு கொண்டத்து மாகாளி அம்மை காமாட்சி அம்மையே!!

18. நீர்மேல் நடக்கலாம் எட்டியும் தின்னலாம் நெருப்பை நீர் போல் செய்யலாம்
நெடிய பெரிய வேங்கையை கட்டித்தழுவலாம்
நீல வீணையை பூணலாம் மார்மீது மணலைச் சமைக்கலாம்
சோறு என பட்சமென உண்ணலாம் பாணமொடு உண்டு விலகசெய்யலாம்
மரப்பாவையையும் பேசச் செய்யலாம் தேர் மேகம் காழங் கடையுற்று
வெண்ணையும் எடுக்கலாம் புத்தி சற்றும் இல்லாத முழு மூடர்தம்
மனதை திருப்பவே எவராலும் முடியாத ஆர்மேகும் கொன்றை பூனை வேலிய
அசுரர்கள் பரவும் அமலனை
அனுதினமும் மனதில் நினை தருசதிரி கிரிவரை அரப்பளி ஈஸ்வரனே

19. திருவே என் செல்வமே தேனே வானோர் புகழும் செஞ்சுடரே,
நற்ஜோதிமிக்க என் உருவே ஊனெ ஊனின் உள்ளமே,
கருவே, கண்ணே கண்ணின் கருமணியே, மணியாடம்
பாவாய் காவாய் அறியா வண்ணம் அறிப்பெற்றேன்,
அல்லல் கொண்டு அங்குடியேன், என்ன செய்வேன்,
அறியாண அந்தணர் தம் சிந்தயானை அருள்மரும் நகற்றாணை,
அனுபயர்க்கும் தெரியாத தத்துவமே தேனே பாலே திகழொலிய தேவர்க்கும்,
அடங்கெனெ மற்றகவியனை நான்முகனம் கணை கடலும் கலந்தே நின்றாய்,
குபரியானை பெரும்பெற்ற புளியூரானை பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

20. தந்திமா முகவனும், அயமுகா சூரனும், ஒரு யுகத்திலே சமர் விருது சங்கரித்தார்
சஸ்டிவீர புத்திரர் ஒரு யுகத்தில் தாருகனைத் தலையறுத்துத் தணிலில் இட்டார்
கந்தரும் வீரபாகு தேவரும் ஒரு யுகத்திலே சூரனை கருவேர் அறுத்தார்
கரியமால் தூதரும் அனுமானும் ஒரு யுகத்திலே தென்னிலங்கைக்கு தணல் காட்டி
மீண்டு வந்தார் இந்திரன் மருவான செங்குந்த வல்லார்க்கு ஈர் ஆறு தலை ஈந்தார்,
ஈசனுடைய விந்துவாகையால், இவ்வாள்களுக்கு இணையில்லை என்று மறநூல்
செந்தமிழ் கந்தரும் செங்குந்தரைப் பாட தேவி சரஸ்வதி, கண்பார்வை
தீர்க்காயுசு பெற்ற மார்க்கண்டனைப் போலே செழித்து வளர் செங்குந்தமே !!

21. கற்றவர் இடத்திலே நற்றவர் உள்ளத்திலே, கலையான மறைமுடிவிலே
கனக வட்டத்திலே கண்மணி நடுவிலே கருத்துவோர் சித்தத்திலே,
பற்றுவோர் பற்றிலே உற்றுவளர் நீதானே பக்தி விசுவாசகை,
பண்ணு தமிழ் இசையிலே கண்ணும் கருத்துமாய் பக்தி விசுவாசனை,
சிற்றறிவன் என்றென்னை பேரறிவணாக தெளிவாய் ஓதியோதி,
செந்தமிழ் உரைத்திடும் நித்திய துதியென்மாய் தொண்டர் அடிமையானவன்,
சொற்பெரிய கோபி மாநகர் வளரும் மெய்யான தும்பிக்கை யானை முகனே

22. அம்புவியில் உண்டான முதலிமார் செய்யும்
தொழில் ஆசைகவியாய் சொல்கிறேன் கேள் !
அரசமுடன் பணிபவர்கள் சிரண்மேல் குவித்திடும் ஆறுமுகம் ஆணையாகுவார்
தும்பு மடி கோலுடன் தண்ணை கயிராகவே
திரமான முன் திண்டாம் சீர்வண்டி மேலான குழவினால் பூட்டியே
சிறப்புடன் கட்டியென்ன என் கம்பை விழுதாடுடன்
கோமாசி ரத்தினக்கல் ஒன்றை தொங்கவிட்டு கடியான மிதி மிதித்து,
தெறியாய் எறிந்திட்ட நாடா கைதனில் எடுத்து கொம்பினோ,
தார் சூடி இலை நயணமாகவே கோடு உருவி திறமுள்ளதாய்,
கொண்டாடி அவள் மச்சம் மிதிக்கவே குணவீர செங்குந்தமே !

23. விடமுண்ட கண்டனிடம் இடப்பக்கம் அமர்ந்திட்ட விமலியே பெரிய கண்ணி !
திடங்கொண்ட அரக்கரது சிரமதை கொய்திட்ட திரிசூலி நீலிக்கண்ணி !
அடங்கொண்ட ஜலத்தினை அடக்கியவன் தங்கையே, அங்கையர்க் கண்ணியே !
ஆதாரம் வேறில்லை பாதாள விந்தமே அண்டினேன், எனை அருள்வாய் !
அரிமா வாகனம் ஏறி, திரிசூல ஈட்டியுடன் அதிவேகமாய் வருவாய் !
பக்தியான உந்தன்னை நித்தமும், தொழுதிட்டேன் பக்தனைக் காக்க வருவாய்
சதுரிமுகனை சிறை மீட்ட கதிர்வடிவேலனை பெற்ற அம்மை காமாட்சி உமையே !

24. கோங்கமான் திருப்பதி தாமரையில் நூல் கொய்து ! செங்கதிர் வட்டத்தில் இழைத்து,
தேவர்கள் அளகாகவே சில ரிசிகள் பாவோட, சில ரிசிகள் பாத்தோய,
பாவான பின்பு குறிகள் போட்டுமே, ஓரை இடுகின்ற தறிப்பாவினில் ஓட்டி,
இழையிட்டு கட்டி நால் புறமும் தூண்களது நிறுத்தி, நலமுடன் சிம்மாசனம் அமைத்து,
பங்கமா நான்முகன் படமரமாகவும், வேங்கசாட முனிவரைக் கோளாகவும், மேல்விழுதும்
கீழ்விழுதும் செவ்வியும், கேதுமாய் புணிகள் எல்லாம் சனியும் மாய்,
விழுகடனை இரண்டும் சூரனுடைய கையும் காலும்,
அவனுடைய திரகமே மிதிபலகையாகவும், குண்டோதரன் தின்டு முன்
திண்டுமரமாகவே காமாட்சி ஐயரை தொங்கவும், வைத்தார்
சத்தியும் சிவனும் மடிக்கோல் ஆகவே, கணைக்கோல் இரண்டும் கணேசனாக,
ஆதிசேடனை வரிமுனைக்காலில் வரிந்துகட்டி,
மேலான நாரதர் நாடாவுமாகவே மெலிதான பட்டும் நெய்தார் !
கோங்கர் வடம்பூண்ட நண்நாட்டில் புகழ் பெற்றவர் வீர செங்குந்தரே!!!

25. அல்லல்போம், அல்வினைபோம், அன்னையின் வயிற்றில் பிறந்த தொல்லை போம்,
போகாத் துயரம் போம், நல்ல குணம் அறிய மாமருனை கோபுரத்தில் வீற்றிருக்கும்
கணபதி கை தொழுதார் காண் !
வெள்ளைக்கழையுடுத்தி, வெள்ளைப்பணிபண்டு, வெள்ளைக்கமலத்தில் வீற்றிருப்பாய்,
வெள்ளை அரியாசனத்தில் அரசரோடு என்னை, சரியாசனத்தில் வைத்தாய் !
கல்லாய் பிழையும், கருதாய்ப் பிழையும், கசந்து உருகி, நில்லாப் பிழையும்,
நிலையாப் பிழையும், நின்னஞ்செழுத்த சொல்லாய் பிழையாய்,
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய், இறைவா கட்சியே கம்பனே !

26. அலையாழி சூழ் உலகில் அயன் வைத்து திட்ட படி
ஆண், பெண் இரண்டே சாதி
ஆதி சிவன் அமைத்த படி, வீரபாகு தேவரும், ஆண் பிள்ளை சிங்கமானார்
அவருடைய விருதுகள் என்ன என்ன விருதுகள் என்றால்
நிலையான கொலை விருது பசபசற்கர கொடி பச்சை கொடி, நீலமயில் கொடி,
கோழி கொடி, நெடிய கருட கொடி, அண்ணகொடி அண்ண வாகன கொடி
இப்படி தலையான ஐந்து பஞ்சவர்ண கொடியாகும், அப்போ இந்த சிலை
அதிரவே வீரனின் கொலை அதிரவே செம்மையா விழி தண்டை லவண்டை,
துத்தாரி, மல்லாரி, தார்சின்னம், தார்துளசி மாலை பெற்ற பெரியோர்கள்
செல்ல மது கிருபை தர தேவி காமாட்சி அம்மையே வேண்டும் இது சமயம் அம்மா

27. அதிர்ஷ்ட லட்சுமி, எனதுடைய பங்கிலே நீ அகலாமல் இருக்க வேண்டும்,
அதிக சம்பத்தோடு, புத்திர பாக்கியம் அருளது கொடுக்க வேண்டும்
பட்டி மாடு ஆடுடன், குதிரை பலதானியம், பாலாறு பெருக வேண்டும்
பசி என்று வந்தோருக்கு அண்ணமும், தண்ணீரும் பந்தியில் பகிறவேண்டும்
கட்டழகு வாலிபம் வயது நூறு ஆகினும், கருணை அது காட்ட வேண்டும்
உத்தண்ட ராட்சசி கொடி, பில்லி, சூனியம் தூரவே விலக வேண்டும்,
துளசிமா முருகனே ! பழனியின் கிரியனே ! தோகை மயில் மீது ஏறி வர வேண்டும்.

28. ஆணை முகவா, உன்னை அனுதினம் நம்பினேன், ஐங்கரனே ஓடி வருக
ஆறுமுகசாமி பேரிலே கதைபாட அன்புடன் வருக ! வருக !
சதுர்மறிய பிரம்மனும் அன்னவாகனமேறி சரஸ்வதியுடன் வருக !
சேசனத்தில் அரங்கனும் அலமேலு மங்கையுடன் சீக்கிரம் வருக !
தசரதபுத்திரர் ராம, லட்சுமணனுடன், சீதையும் அனுமனும் வருக !
சிங்க வாகனம் ஏறும் சிங்கனாச்சி அம்மனும், சினத்துடன் வருக !
வெண்பசு மீது அமரும் சக்தியும், சிவனும் என் அருகில் வருக !
எருமை வாகனம் ஏறும் எமதர்மராசனும், என் முன்னமே வருக !
யானை வாகனம் ஏறும் அய்யனார் முனிவரும் ஆடியே வருக
முப்பத்து முக்கோடி தேவரும், முனிவரும், என் முன்னமே வருக !
அக்னி வானத்தை அதிரவே பொடி செய்யும் அம்மை காமாட்சியும் வருக !

புஸ்பத்தின் மீது அமரும் அம்பிகையும், மாரியும் அருகினில் வருக !
நாற்பத்தி எண்ணாயிரம் ரிசியும், முனியும், நடனப்பெண் ஆடியே வருக !
இத்துணை பேர் இங்கே இருக்கையில், ஏன்? ஏன் ? ஏன்?
அந்த ஆறுமுகம் வரவில்லை ?
எங்கேயோ ஞாபகம், எவ்விடத்திலோ சிந்தனை, என்மேல் மனஸ்தாபமோ ?
நாலைந்து வருடமாய், நித்திரை இல்லையே, நாதனை காண வேண்டி
அண்ணம் புசிக்கலை தண்ணீர் குடிக்கலை நற்சுகம் பெறவில்லை
சங்கு நாதங்கள் எங்கேயோ கேட்குதே ? சண்முகம் வருவதாக,
வருகிறார், வருகிறார், வர்ணமயில் ஏறியே கந்தனும் வருகிறார் !
உன் காலில் தண்டையும், கலகலவென வெண்டையும் கணகமணி சத்தத்துடன்
காவேரி சடைபுரிந்தாட கவச குண்டலமணிந்து கானமயில் ஏறியே
கந்தன் கடம்பன் ஒரு காவடி, இடும்பன் ஒரு காவடி,
காணாதது அதை பல லட்சம் கோடி கண்டவர்கள் பாடவும் கைகொட்டி ஆடவும்
கந்தவேல் நின்றாடவும் கடம்பா வனத்தை வதம் செய்த கதிர்வேல் எடுத்த நீரும்
கடகடவென மயில் ஏறி வள்ளி தெய்வானையோடு வருவாய் கதிவேலா முருகா !

29. ஆதியில் சக்தி என்று அவதாரம் எடுத்து நீ அம்மனை வடிவாகக் கொண்டு
அறனென்ற நாயகி வேண்டும் என்றே அனேக தவசுகள் செய்தாள்
மகனென்ற கணபதி உதித்ததுமே கிளம்பியே என் தாயே என்று நின்றார்

மகன் என்று பாராமல் மனம் அது கலங்காமல் மங்கை நீ எரித்து விட்டாய்
அடுத்தது விஷ்ணுவும் உதித்ததுமே என் தங்கையே என்று நின்றார்
அண்ணன் என்று பாராமல் அருளது கொடுக்காமல் அம்மன் நீ எரித்து விட்டாய்
அடுத்து சிவனும் உதித்துமே கிளம்பியே ஏண்டி என்று நின்றார்

பார்வதி உமையவன் பக்தா உங்களுடையவள நான் என்று பதில் மொழி கூறவில்லை
இவ்விடத்தில் சாம்பல் பஸ்பமாய் இருப்பது ஏனோ என்று கேட்டார்
என் நெற்றிக்கண்ணால் நீர் நீராக்கினேன் என்றாள்.

சிவனும் பார்த்து அக்கண்ணை எனக்கு கொடேன் என்று கேட்டார்
உமையவள் அக்கண்ணை கொடுக்க மறுத்தாள்
அக்கண்ணை கொடாவிடில் என்னையும் எரிப்பாய் உன்னுடன்
சேரேன் என்று உரைத்தார் சேரேன் என்று உரைக்கவே உமையவள் பார்த்து
சீக்கிரம் அக்கண்ணை கொடுத்துவிட்டாள் சிவனும் வாங்கி நெற்றியில் அணிந்து
முக்கண் சிவனானார் யானை முதல் எறும்பு வரை 84 லட்சம் ஜீவராசிகளையும்
படைத்தார் இவர்களை எழுப்பும் என்றார் அவர்களை எழுப்பி நீங்கள் நினைத்ததை
நினைத்தபடி கேளும் என்றார். இப்படி இருந்து வருகின்ற நாளில் உமையவளை மலை
அரசனுக்கு பிரகடனம் செய்து வைத்தார்

30. ஆதிமுதல் ஆகவே கந்த புராணத்தை ஆதி கவியாய் சொல்லுவேன்.
அந்தமுடன் தச்சனர் பதினாறு லோகமும் அரசுமே செய்யும் நாளில்
அமரர்கள் கூடியே அரனுக்குபதில் செய்ய யாகமே வளர்த்தினார்கள்.
அரனுடைய அருளினால் வீரபுத்திர பாகத்தை வளர்த்தினர்.
அது ரச்சியாகிய காசி ரிசியண்ங் கூடி அவள் பிள்ளை நாலு பெற்றாள்.
அறிவுடைய சூரனும் ஊசிமுனை தண்ணிலே அக்கினி தவம் செய்தான்
அப்பவே ஈசனும் அவனுக்கு அனேக வரங்களை தந்தார்
அப்பவே சூரனும் தெய்வசிலை தள்ளியே தேவர்களை வதை செய்தான்
தேவர்கள் கூடியே உமையவள் சாபத்தினால் நாங்கள் செய்ததே குற்றம் அம்மா
என்று அறுமுகனை அழைத்து பத்து பராசக்தி வேலைக் கொடுத்தார்.

ஆறுமுகத்திற்கு இளைய வீரபாகு தேவரும் அவர்க்கு உள்ளாகும் என்றார்
அஞ்சு பஞ்சவர்ணம் பதினெட்டு விருது அரனுமே கைக் கொடுத்தார்
அந்த சூரனை வெட்டி அமரர் சிறை நிற்க வென்று அரனுமே அனுப்பிவைத்தார்
அண்டங்கள் முட்டவும் சேனை தாளத்துடன் யார் போய் வரவேண்டும்
ஆண்சிங்கம் முசும்பினார் போல் உசும்பியே வீரபாகு தேவரும் அணைகடல்
அணைத்தாண்டி அடுத்து வடக்கு வாசல் மகேந்திர புரியில்
அதில் ஒரு கஜமுகா சூரன் ஆயிரம் சிரசுள்ளவன்
அவனை சம்காரம் பண்ணியே சூரனிடம் சிம்மாசனத்தை ஆறுமுகவர் தஞ்சமென்றார்
அழகான செங்குந்தர் நிலையான சம்மந்தர் அதிவீர செங்குந்தமே !!

31. மண்டலம் தனிலே கண்கண்ட தெய்வம் நீ. மற்றும் ஒரு தெய்வம் உண்டோ.
மந்திரப்பேய்களும். தந்திர சூரியனும் மற்றும் சந்தாரி பகையும் கண்டு உனது பாதமலர்
நின்று செய்திட கலங்கிப் படிந்தோடும் கண்மமும். பிணியும் வன்மமில்லாமல்
கந்தனிடம் தொண்டனிருமே. இன்று முதலாய் வந்த பண்டுபழி இனிமேல் எந்தன்
மேல்வர இயலாமல் அருள்வாய் தண்டுளனை மலையணி. மாரமணிட
தங்கையே தரணிபுகழ். ஒற்றயூர் வாழ் தங்கமலர் நாதர்சடை கங்கையுருவான
கொடி திங்கள் ஒளிவான வடிவே !!

32. தாயே. காமாட்சி தயாபுரி. கேளம்மா பார்புகழும் வீர உலகிலே வல்லான்
சிரசை கொண்டு வர மக்கள் உண்டோ ? என்று கேட்க

சேரன். சோழன். பாண்டியன் மூவேந்தர் சபைகளிலே படைத்தலைவர்கள்
அத்துணை பேர்களையும் கேட்கவே மவுனம் சாதித்தனர் !

அப்போது பார்புகழும் வீர செங்குந்தத்திலே மைந்தன் உண்டென்று சொன்னார்
ஓடோடி வந்தமே உறுதியுடன் சாந்தி லிங்கன். சங்கரலிங்கன் என்ற இரண்டு
முதலிகளும் தாம்பூலம் கொடுங்கள் என்று கேட்டனர்

நாளது இருபத்தொன்றுக்குள் வல்லான் சிரசையும் கொண்டு வந்துமே கொடுக்கின்றோம் என்றுமே கூறினார்கள்

அப்போது சேர. சோழ. பாண்டிய மூவேந்தரும் உங்களுக்கு என்ன வேண்டும் என்றுமே கேட்டனர் அப்போது அண்ணமார் இருவரும் சேர. சோழராசனது பட்டத்து உடைவாளது வேண்டும் என்று கேட்டனர்.

அப்போது சேரனும். சோழனும் பட்டத்து உடை வாள்தனை கொடுத்தனர் தொடைதட்டி. மார்தட்டி. ஆட்கடித்து. பற்கடித்து. மேல்மீசை முறுக்கியே அனைவருடன் நாங்களும் புறப்பட்டோம்.

அண்ணன்கள் 24 பேருடன் திருப்பாற் கடலருகே சென்றோம் அப்போது மாதாரிச் சின்னானும் கூட உண்டு இரண்டு அண்ணன்மார்களை படகாக கட்டி ஒரு அண்ணனை பாய்மரமாக நிறுத்தி 16 முழத்துண்டை எடுத்து பாயாக கட்டினோம் !

அண்ணார்களின் இரு கைகளை துடுப்பாக. துணையும் ஏழு சப்த சமுத்திரங்கடந்து வல்லான கோட்டையை பார்த்தோம் ?
செம்புத்தூனும் நட்ட செம்புத் தகட்ட பரப்பிய ஏழு சுற்று கோட்டை எறும்பு ஏற மண்டபமாம் பத்து சுற்று கோட்டை பாம்பேறா மண்டபம்

இருபது சிரசை கொன்று உதிரத்தை செம்புத்தூண் மேல்வீசி அது மீது நாங்கள் இருவரும் ஏற மாதாரி சின்னானும் கூட ஏற அச்செப்புக் கோட்டை மீது போனோம் அங்கு யாரை நினைத்தோம் !!

அம்மை காமாட்சி. முத்துகுமாரசாமி. மும்மூர்த்திகளையும் எண்ணினோம் வல்லான் கோட்டையை சுற்றியே வரும்போது அவனை காணாமல் மதி மயங்கியே கோட்டைக்கு சென்றோம். அவன் என்ன விதமாய் இருக்கின்றான் என்றுமே சொல்கிறேன் !
கேளுங்கள்

தாசிகள் சதுரங்கம் ஆட. தந்தோம் மித்தோம் என்று மேளங்கள் கொட்ட. நாங்கள் மதி மயங்கி நின்றோம். அம்மா அப்போது மாதாரி சின்னானனும் வல்லான் குதிரை லாயத்திலே சென்று படுத்து நித்திரை செய்தான். அப்போது வல்லானின் குதிரை பாகன் மாதாரி சின்னானின் மார்மேல் ஆணிதனை வைத்து அடித்தான். அம்மாதிரி சின்னானும் தந்தையர்க்கு ஆபத்து வரும் என்று அஞ்சாமல் படுத்திருந்தான். பின்னுமே சென்றோம். வல்லான் நித்திரை செய்யும் இடத்திலே நின்றோம்.

அவனை தட்டி எழுப்ப வேண்டாம் என்றுமே சேர. சோழனும் கொடுத்த உறை வாளை கொண்டு வீறிட்டு அடித்தோம். அப்போது வல்லான நித்திரை தெளிந்து நீங்கள் யாரென்று கேட்க ? வீரபாகு தேவனின் தம்பிகள் நாங்கள் என்றோம் அப்போது வல்லான் என்ன சொல்கிறான் பூவுலகில் என்னை யாருமே கண்டுபிடிக்க முடியாத இடத்தில் இருந்தும் நீங்கள் அறிந்தீர்கள் ! உங்களைப் போல் பலசாலிகள் வையகத்தில்

யாரும் கண்டதில்லை !
எதற்கு வந்தீர்கள் ? என்று வல்லான் கேட்க நாங்களும், உன் சிரசை கொண்டு போக வந்தோம் ? என்றோம். அப்போது வல்லான் " மெய்சிரசிற்கு பதில் பொய் சிரசு தருகிறோம்" என்றான். ஆனால் நாங்கள் "உன்னுடைய மெய் சிரசுதான் வேண்டும்" என்று நாங்கள் உறுதியுடன் இருந்தோம்.

அப்போது வல்லான் என்ன சொல்கிறான் மூவேந்தர் சபை நடுவே என்சிரசை வைத்து அப்பொய்சிரசை வாய் திறந்து என்னுடைய கோட்டை மீதேறி வீரபாகு தேவனின் தம்பிகள் என் சிரசை கொய்தனர் என்று சொல்லுவேன் ? என கூறினான் பின்னுமே வல்லான் என்ன சொன்னான் உன்பிள்ளை தலைமுறைக்கும் நான் பூவுலகில் கால்மிதிக்க மாட்டேன் என்றுமே சத்தியங்கள் செய்து கொடுத்தான்.

பின்னுமே நாங்களும் வல்லான் சிரசுதனை எடுத்து செம்புத்தூண் விட்டு இறங்கி மாதாரி சின்னானையும் எடுத்து எங்கள் அண்ணன்கள் இருபத்தி நான்கு பேர் முண்டத்தையும் எடுத்து வந்தோம். சமுத்திரராசனும் மதிமுகம் என்று மச்சத்தை கொண்டு எங்களுடைய அண்ணன்மார்களின் பிணங்களோடு கரையேறுங்கள் என்றார். யாரார் புறப்பட்டோம் மதிமுக மச்சம், சந்திரகிரி மச்சம், மதிகண் மச்சம், என்ற இப்படி 24 மச்சங்களும் எங்களுடன் புறப்பட்டன.

பிணங்களை கவ்வியே இழுத்து கரைதனில் ஏற்றினோம் அம்மா ! கரைதனில் வந்துமே நம்ப காமாட்சியை நினைத்து நாங்கள் கண்ணீர் விட்டு கதறினோம் அம்மா ! அப்போது காமாட்சியும் பிடிசெம்பு நீரும் பிரம்புதனைக்கையில் எடுத்துமே ஓடோடி வந்தார் கரை அருகினிலே அம்மனை கண்டதும் நாங்கள் இருவரும் கதறி அழுதோம் அம்மா ! அம்மா !!

அப்போது அம்மனும் பார்த்து யாரை முதலில் எழுப்புவது என்று கேட்டனர் என்தலை மகன் மாதாரி சின்னானை முதலில் எழுப்பும் அம்மா அம்மை காமாட்சி பிடிசெம்பு நீரும் எடுத்து மாதாரி மேல் தெளித்து தட்டியே எழுப்பினார் பின்னுமே 24 அண்ணார்களையும் எழுப்பி அம்மனிடம் வரமது வாங்கியே சோழ தேசம் புறப்பட்டோம் இப்படியே நாளம் 19 தாண்டி விட்டது 2 நாளைக்குள் சோழ தேசம் வந்து அடைந்தோம் அம்மா !!

ஆட்கடித்து பற்கடித்து சபை தனித்து சென்றோம் நாங்கள் சேர சோழ பாண்டிய மூவேந்தரும் பார்த்து என்ன மூட்டை என்று கேட்க

நாங்களும் இதோ பாருங்கள் என்று வல்லான் சிரசுதனை காட்டினோம். எப்படி அந்த வல்லான் சிரசுதனை கொய்தாய் என்று பாண்டியன் கேட்டான்

15

அப்போது என் தம்பி சங்கரலிங்கன் உடைவாள் கையில் எடுத்து இப்படி கொய்தேன் என்று தன் சிரசை கொய்த காண்பித்தான்

இப்போது என் சிரசு என் சொல்கிறது கேளுங்கள் மூவேந்தரே ! அச்சிரசு வல்லான் சிரசிடம் நான் உன் தலையை நடுக்கடலில் கொய்தேனா இல்லையா ? என்று கேட்க

இவ்வல்லான் சிரசு வாய்திறந்து "வீரபாகு தேவனின் தம்பிகள் என் சிரசை கொய்தனர்" என்று கூறியது மூவேந்தரும் பார்த்து இது பொய் சிரசு அல்ல மெய் சிரசுதான் உங்களைப் போல் வீர செங்குந்தர்கள் வையகத்தில் யாருமே இல்லை ? என்று மூவரும் கூறினார்கள். அப்போது நாங்கள் அனைவரும் கூடி அம்மனை கண்ணீர் விட்டு அழைத்தோம். அம்மனும் வந்து எனது தம்பியை எழுப்பினார்.

இன்னமும் மூவேந்தரும் அரசரும் செப்பேடு பட்டயத்தில் விருதுகள் பதினெட்டும் பூவுலகில் எந்த சிற்றரசர் சபைதனுக்கும் போய் வரலாம் என்றுமே செப்பேட்டில் கையெழுத்த இட்டு
மாதாரி சின்னானுக்கு ஆலயங்கள் வடக்கு வீதி, கிழக்கு வீதியும் செப்பேட்டில் எழுதினார். அப்போது சபைதனிலே யாரார் இருந்தனர் முப்பத்துமுக்கோடி தேவர், முனிவர் நாற்பத்தி எண்ணாயிரம் ரிசிகள், மும்மூர்த்திகளும் இருந்தனர். நாங்கள் சேர, சோழ அரசானது பட்டத்து உடைவாளை கொடுத்து விடை பெற்றோம்.
அழகான செங்குந்தம் நிறைஞான சம்பந்தம் அதிவீர செங்குந்தமே !

சீர்பெற்ற இப்பரத கண்டமது தேசத்தில் செழித்த ஈரோடு நகரில்
செங்குந்த முதலியார் அனைவரும் கூடியே சேர்ந்துமே பூச்சாட்டி செப்பமாய்
பெரியோர்கள் முத்துக்குமாரரை மேன்மையாய்த் தொழுகவைத்து ஈரெட்டு நாள்
சென்று எங்கள் குரு சாமிக்கு இன்பமாய் மாவிளக்கு எடுத்து எழில்பரவும்
செங்குந்த முதலியார் அனைவரும் இணைபிரியாமலே நின்று எந்தாயே ஈஸ்வரியே
உந்தனிடம் பாதமே கெதியென்று எண்ணியே பூவரம் வாங்கி எடுத்த தேர்
சங்கிலி கத்தியால் குத்தியே இரத்தங்கள் பீரிட உன் அழகு வெளிவாங்கி
இப்படியாகவே முத்துக்குமாரர் தேர்க்குத்தி வீதியில் கொண்டாடி வரவும் கும்பல்
கும்பல் ஆக வெலங்கைச் சான்றோர்கள் கூட்டமாய் தடுத்து நின்றனர்.
அகோரமாக இரு கையில் சண்டைகள் செய்துமே கொலை செய்ய ஏற்பாடாகி
கூடிய பெரியோர்கள் நாடியே கச்சேரி கோர்ட்டில் பிராது செய்தனர்.

கூப்பிட்டு இருக்கையில் விசாரணைகள் செய்துமே கோர்ட்டார்கள் சட்சு பண்ணவும்
குட்டைகள் போட்டுமே வெலங்கை சனத்தோரை கொட்டறையில் அடைத்து வைத்தனர்
கோடியே பணம் காசு செலவு பண்ணியே கூட்டியே வெளியே வந்து கோயம்புத்தூரில்
வால் கோல் துரை நீதிபதியார் போலிசார் தாசில்தார் அனைவரும் உத்தரவு
போடவும் மேல் கண்ட பணத்தை ஆள்கின்ற ராணிக்கு கொடுக்க உத்தரவு பெற்று
கோயம்புத்தூரில் வால் கோல் துரை நீதிபதியார் போலிசார் தாசில்தார் அனைவரும்
ஈரோடு நகரில் வந்து குமாரர் தேர் குத்தவும் பூவரம் வாங்கவும்
தேர்குத்தி கொண்டாடி வரவும் உலகம் தன்னில் உங்களைப்போல் வீரரை வேறு எங்கும்
கண்டதில்லை என்று கோர்ட்டார் கொடியினை கொடுத்து அனைவரும் பயணம்
ஆனார்கள். கூடிய பெரியோர்கள் எங்கள் குரு சாமிக்கு அபிசேகம் எண்ணி
எண்ணெய் பால், பழம் சகலமும் கூட்டியே இன்பம் ஊட்டி முடித்தார்.
எழில் பரவும் செங்குந்தம் கஸ்தூரி தன்னிலே ஏது பிழை செய்தாலும்
வாது பிழை செய்யாமல் நீ எனக்கு அருள் புரிவாய்
இந்த இலக்கணம் செந்தமிழ் கேட்டவர் என்றென்றும் நீடூழி வாழ்வார்.





17

*வாழ்த்துக்களுடன் .....*

**நா. முருகேசன் முதலியார்**

பெரியதனக்காரர், காமாட்சியம்மன் திருக்கோயில், மீனாட்சி வலசு.

செல் : 99949 24857

முனைவர். **மு. காளீஸ்வரன் முதலியார்**

உதவி பேராசிரியர் மற்றும் பொருளாதாரத் துறை தலைவர்,

ஈரோடு கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோபி.

செல் : 94866 44643

**ரா. சண்முகம் முதலியார்**

வைரவிழா மேல்நிலைப்பள்ளி, கோபி. செல் : 94420 01920

**கோ.ப. சின்னுசாமி முதலியார்**

ESI & PF கன்சல்டண்ட், பாண்டியன் நகர், திருப்பூர். செல் : 75980 95992

**செ. கோவிந்தராஜ் முதலியார்**

தமிழ்நாடு அரசு போக்குவரத்து கழகம், கோபி. செல் : 94878 98687

**ப. சரவணக்குமார் முதலியார்**

ஸ்ரீ பாலாஜி டிரேடர்ஸ், கமிட்டி, அருள்மிகு ஸ்ரீ காமாட்சி அம்மன்

கைக்கோளர் இளைஞர் பேரவை, கோபி. செல் : 98426 28087

**ந. சரவணன் முதலியார்**

கமிட்டி, அருள்மிகு ஸ்ரீ காமாட்சி அம்மன் கைக்கோளர்

இளைஞர் பேரவை, கோபி. செல் : 96004 11171

**செ. கார்த்திகேயன் முதலியார்**

கமிட்டி, அருள்மிகு ஸ்ரீ காமாட்சி அம்மன் கைக்கோளர்

இளைஞர் பேரவை, கோபி. செல் : 94866 87715

**ப. வெங்கடேஷ் முதலியார்**

கமிட்டி, அருள்மிகு ஸ்ரீ காமாட்சி அம்மன் கைக்கோளர்

இளைஞர் பேரவை, கோபி. செல் : 96009 86611

**க. தமிழ்செல்வன் முதலியார்**

ஸ்ரீ சமய பக்த குழு, திருப்பூர். செல் : 91505 77460